உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஐங்குறு வேண்டுகோள்

BY

பண்டிட்

R. உலகநாதபிள்ளை,

(POET LAUREATE) பல்கலை வித்வான்.

புதுக்கோட்டை.

1936

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# ஐங்குறு வேண்டுகோள்

BY

பண்டிட்

## R. உலகநாதபிள்ளை,

(POET LAUREATE) பல்கலை வித்வான்.

1936

கமலா ப்ரெஸ், புதுக்கோட்டை.

# முன்னுரை.

அடியேன் பல்வேறு வேலைகள் பார்த்துவந்த போழ்து, "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான், பெற்றத்தால் பெற்ற பயன்," என முற்றுணர் புலவர் கட்டளையிட்டருளியவாறு யான் திக்கற்ற நான்கு குடும்பத்தார்களைப் பாதுகாத்துவந்தபடியாலும் முறைபிறழா நெறியின்கண் நின்றே பொருளீட்டி வந்தபடியாலும் எனது வருவாயுள் ஒரு சிறிதும் எஞ்சிற்றிலது. ஆதலின் எனக்கு உபகாரச் சம்பளம் (பென்ஷன்) ஏற்பட்ட காலத்தில் செலவுக்கு மிக்க முட்டுப்பட்டுத் துயருற்று, மிடியுற்று, நோயுற்று வருந்துங்காலத்துச் செல்வச் செருக்குற்ற செல்வர்பாற் சென்று செய்யுள்யாத்து வயிறு வளர்த்தல் பழியும் பாவமுமென அஞ்சி, எல்லாம்வல்ல இறைவனைப்பாடின், இருசெல்வங்களும் ஒருங்கெய்தலாமென மனத்திடங்கொண்டு, இவ்வைந்து நூல்களையும் இயற்றி "ஐங்குறு வேண்டுகோள்" எனப் பெயரிட்டனன். உடனே எனது நெடிய துயரும், கடியமிடியும், கொடிய நோயும் பொடி. பொடியாயின. மெய்யுணர்வும் வீட்டின் விருப்பும் என்மாட்டு நாளும் மிக்கெழுகின்றன.

ஆனதுபற்றி, இந்நூலைக் கடவுளிடத்தன்புபூண்டு மனத்தூய்மையுடன் ஓதுபவர்கள் மேற்குறித்த பயன்கள் யாவும் ஒருங்கெய்துதல் ஒருதலையென்னும் திண்ணிய வெண்ணத்தாலும், "யான்பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்", என ஆன்றோர் பொன்மொழி என் புன்மனத்து எழுந்ததாலும் இதனை வெளியிடுவான் எண்ணினேன்.

அதுபோது இந்நூலைக் கண்ணுற்ற,
திரிசிர புரத்திற் கொருசிர மானோன்,
துரிசறு மனத்தோன் சோழர்தம் மரபோன்
கல்வி கேள்விகளிற் கருத்தைச் செலுத்துவோன்
நல்விற் பனர்தம் நட்பை விரும்புவோன்
குருவைச் சிவமெனக் கொண்ட கொள்கையோன்
தெருளுறு சிந்தையன் சினத்தைச் சினந்தோன்
அடக்கம் வாய்மையை அணியெனப் பூண்டோன்
அறத்தின் ஈட்டிய அரிய பொருடான்
சிறிதே யாயினும் பெரும்பயன் கொள்பாக்கு
நல்வழி யுதவும் தெள்ளிய மதியினோன், ஆகியவரும், மாயவரம் இருப்புப்பாதைச் சதுக்கத்தில் (Railway Junction) கப்பற்றுறைமுகச் சாமான்களேற்றும்

கணக்கர் (Tranship clerk) வேலைபார்த்து வருபவரு மாகிய T. M. நடேசபிள்ளையவர்கள் இந்நூல் உலகினர் யாவர்க்கும் இன்றியமையாததும் பேருதவியுமாமென கருதி வெளியிடுவாராயினர்.

அன்னோர் பால் யானும் இத்தமிழுலகும் என்றும் நன்றிபாராட்டக் கடப்பாடுடையோமாகுக.

இங்ஙனம்,

**பண்டிட் R. உலகநாதன்.**

---

நேரிசை வெண்பா.

பைங்குருகு பாடுங்காப் பண்பார் புதுவையுளான்க்
ஐங்குறு வேண்டுகோ ளன்பாக—நன்குருகும்
நன்மனத்தோ டோதினர்க ணற்பயனெய் தச்சொன்னான்
தன்ம னுலகநா தன்.

R. Meenakshisundram Pillai,
Ag. Tamil Pandit,
Ranee's Free Girls' High School, Pudukotah.

# திருவாலவாய்

# துயர று பதிகம்.

உ

## காப்பு.

அறிவைத் தலையுமெழி லைந்தொழிலைக் கையும்
செறிமொய்ம்பை வல்லுருவுந் தேக்கற்-றெறியருளை
தன்மதமுந் தோற்றெடுக்கந் தன்வயிறுங்
காட்டவெழும்
நின்மலவே, முத்தை நினை.

---

உ

சிவமயம்.

# திருவாலவாய் துயரறு பதிகம்.

---

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

பூரண வறிஞர் துயரமொன் றணுகார் பொய்சொலித்
துயரகற் றென்பார்
காரண வறிவி லோர்கள்மெய்த் துயரற் கதறுவார்க்
கருள்வதே யருளாம்
பூரண வொளியாய் எங்குநீ யிருப்பின் பொருந்துமோ
பேதைமை யிருள்தான்.
ஆரண முரைக்கும் ஆலவா யுடைய அண்ணலே
துயரறுத் தருளே.—1

தாயினைப் புணர்ந்தோன் பாதகந் தீர்த்தோய் தலைமிசை
விறகுமண் சுமந்தோய்
தாயெனப் பன்றிக் கருண்முலை சுரந்தோய் மகபதி
பழியினைத் தவிர்த்தோய்
நேயமா மாம னெனவழக் குரைத்தோய் நிலத்திலெச்
சுகத்தையுங் கொடுத்தோய்
ஆயரு வுருவா மாலவா யுடைய அண்ணலே துயராறுத்
தருளே.—2

கருவினி லுதித்த நாண்முத லாகக் கவலைவெங்
கடலுழல் கின்றேன்.
மருவினு மிராப்போ திருளொளி பின்னே வந்துறு
மெனவகுத் துப்பின்
இருவினைப் பயனுந் துயாமுஞ் சுகமு மெய்துமென்
றுரைத்தனை யினிநல்
அருவினைப் பயனு வாலவா யுடைய அண்ணலே
துயராறுத் தருளே.—3

கன்மத்தின் பயனே துயரெனின் மறையா கமங்கள்நற்
புராணங்க ளெவற்றும்
நன்மையித் தலத்தை யடைந்திடிற் கன்ம மியாவுமே
நணுகிடா வென்று

சொன்னசொற் றவரு யென்னவிங் கடைந்தேன்
தொன்மைநின் னுடல்நன் குணர்ந்தே
அன்னங்கள் அமரு மாலவா யுடைய வண்ணலே
துயரறுத் தருளே.—4

துயரமே யுடலை யுயிரையு மழிக்கும் தூயநல் லறிவையு
மொழிக்கும்
நயமிகு கல்வி ஞானத்தை மறைக்கும் நல்லவூண்
உறக்கத்தைக் குறைக்கும்
பயமிகு நோயை விளைக்குமஞ் ஞானப் பயிரதைத்
தழைக்கவே வளர்க்கும்
துயரமே யறியா ஆலவா யுடைய அண்ணலே
துயரறுத்தருளே.—5

உயிர்விடுங் கால மனநிலைக் கேற்ப வுறுஞ்சுகந்
துக்கம்பிற் பிறப்பஃ
துயிருள்ள காலப் பழக்கமே யாகும் ஆதலா லுன்னிட
மடைந்தேன்
உயிருள்ள போதே யின்பமுற் றினியென் றின்பமே
யுறவருள் கூர்ந்தென்
உயிரினுக் குயிரோய் ஆலவா யுடைய அண்ணலே
துயரறுத் தருளே.—6

வேண்டுதல் வேண்டா மையிலா னடிசே ரெவர்க்குமெவ்
விடும்பைமே வாதென்
றீண்டுயர் ஒப்பு மிலாத்தமிழ் மறையு மியம்பிய
தாலென்றும் நீயே
வேண்டுதல் வேண்டா மையிலா னென்ன நின்னடி
சேர்ந்தனன் மேலாம்
ஆண்டவ னீயே ஆலவா யுடைய அண்ணலே துயாறுத்
தருளே.—7

துயரிலா மனத்தைப் பெற்றுளோ ரவரே துகளறு
செல்வரோ யென்றுந்
துயருள மனத்தைப் பெற்றுளோ ரவரே துகளுறு
நல்குர வுற்றோர்
கயலுறு விழியா ளருகுவீற் றுளதால் கருவினி
லுழல்வினைப் பார்க்கத்
துயாறு முருவாம் ஆலவா யுடைய அண்ணலே
துயாறுத் தருளே. 8

பலதல மிருப்ப வித்தல மடைந்த பான்மையெற்
றுக்கென வினவின்
நலமுறுந் துவாத சாந்தநற் றலமா நக்கனீ யாசுசெய்
ததினால்

பலபவ மறுக்கும் பான்மையால் *மூன்று சிறப்புநன்
கமைதரும் பண்பால்
சொலவிவ ணடைந்தேன் ஆலவா யுடைய வண்ணலே
துயராறுத் தருளே. 9

வெளியினிற் சொன்னால் வெட்கமா மழுதாற் றுக்கமா
மென்றுளே யுடைந்தும்
வெளியினு முள்ளு மிருக்குநீ யறிவை யென்றும்ஊ
டியும்வசை விண்டும்
தெளியினும் மேன்மேற் றுயரம்வந் தணுகிற் சிறியனே
னெவ்விதம் பொறுப்பேன்
அளியின முராலும் ஆலவா யுடைய அண்ணலே
துயராறுத் தருளே. 10

இற்றை நாள் வரைக்கும் நின்னையே தொழுதேற்
கினியும்நீ யின்பரு ளாயேல்
மற்றைய ரெவர்பாற் செல்லுகேன் உனக்கே
வந்திடு மிழிவுதன் மயமாச்
சிற்றறி வுடைய குழவியும் புழுவைச் செய்திடு
மெலாம்வல சித்தேர்ய்
அற்றிடு மப்பேர் ஆலவா யுடைய அண்ணலே துயராறுத்
தருளே. 11

---

* மூன்று சிறப்பும்=மூர்த்தி, தலம்தீர்த்த விசேடமும்.

# காப்பு.

பவளமலை யைச்சார்ந்த பார்வதியிற் றோன்றுந்
தவளநீ றார்மேனிச் சங்கத்—தவளகுழை
அத்திக்கை யான்பாத மாமலர்த்தே னுட்கொளமெய்ச்
சித்திக்கை யாம்பிணியுந் தீரும்.

---

(சிலேடை)=இரட்டுறமொழிதல், பவளமலை=பவளநிறமுள்ள மலை, (சிவபெருமான்),பார்வதி=சேற்று நிலம் (மொழிமாற்று) (உமை), தோன்றும்=முளைத்த (பிறந்த), தவளநீறு= வெண்ணிறமுள்ள திருநீறு (மந்த்ரநீறு), ஆர்=பொருந்திய (ஆத்தி), மேனி=திருமேனி, உடம்பு (குப்பைமேனி) சங்கத்தவளகுழை=வெள்ளைச்சங்கத்தாலாகியகாதணி (சிறந்த வளவிய சங்க இலை) அத்தி=யானை (அத்தியின்கள்) ஆகுபெயர் or யானை நெருஞ்சி கையான்=கையையுடையான், வினாயகன் (கையாந்தகரை,) பாதம்=திருவடி, (சிறுசெருப்படி) மாமலர்த் தேன்=திருமகள் வதியும் தாமரைமலரின் தேனையொத்த அருள். (பன்னோயகற்றும்) சிறப்புவாய்ந்த மலர்த்தேன், உட்கொள=மனதில் நினைக்க (உண்ண) மெய்=உண்மை (உடம்பு), சித்தி=அறிவு (அழியாமை) கைஆம்=கைகூடும், உண்டாம், பிணி=நோய்.

சிவமயம்.

# புள்ளிருக்கும் வேளூர் நோயறு பதிகம்.

———:o:———

(எழு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்).

[1]திருவளர் [2]மருமத் தொருவனு [3]மயனுஞ் [4]செருக்கற
வயித்திய நாதப்
பெருவளப் பேர்கொண் [5]டுலகளந் தோங்கு
நெடுங்கொடி பிடித்துல கனைத்தும்
[6]இருவகை நோயு மகற்றுது [7]மென்னு முரசறைந்
தெரிமழு வெடுத்த
[8]குருகமர் வேளூர் வயித்திய நாதக் [9]கொண்டலே
நோயறுத் தருளே.—1.

1 இலக்குமி 2மார்பு, 3பிரமன், 4ஆணவம், மயக்கம். 5 வாமனவதாரத்தில் உலகங்களனைத்தையும் தனது அடிகளானளந்த திருமாலாகிய இடபக்கொடி. 6 உயிர்ப்பிணி, உடற்பிணிகள். 7 என்று (செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். 8 புட்குலங்கள், பறவைகள். 9 மேகம்.

அறையுளே ஒளிந்தே யாடியம் மட்டோ டமைவிலா
தம்பலத் தாடி
இறையெனப் பேர்கொண் டம்மட் டிலமையா
தெங்கணும் வயித்திய நாத
நிறைதரும் பெயருங் கொண்டனை யதனால் நீணிலத்
தணுகினோ ரெவர்க்கும்
குறைதப வேளூர் வைத்திய நாதக் கொண்டலே
நோயறுத் தருளே.—2.

கன்மங்கள் பலவா நோய்களும் பலவாக் கன*கழு
வாய்கழும் பலவாக்
சன்மகாண் டத்துள் வகுத்துப்பின் னெம்மைக்
காணவெக் கன்மம்போ மென்னுந்
தன்மத்தை யுரைத்தாய் ஞானகாண் டத்து
ளாதலாற் றாளினை யடைந்தேன்
நன்மண வேளூர் வயித்திய நாத நலத்தனே
நோயறுத் தருளே.—3.

*பரிகாரம்

நோயினைத் துக்குங் காரண மொன்றே யாதலால்
நோய்மருந் தொன்றென்
றுயநுண் மருத்துப் பண்டிதர் கண்டார் யானுமித்
தலத்தமர் மண்ணே

தூயநன் மருந்தென் றுணர்ந்திவ ணடைந்தேன்
தொண்டர்கள் சூழ்தரு கனகக்
கோயிலார் வேளூர் வயித்திய நாதக் கொண்டலே
நோயறுத் தருளே.—4.

பலர்க்குபல் காலம் நன்கிழைத் தொருகால்
சிலர்க்குநன் கிழைத்திடாப் பண்போர்
நலத்தகு மப்பே ரிழப்பர்பல் லோர்க்கும் நோயற
நன்கிழைத் தெனக்கு
நிலத்தில்நோய் நீக்கா திருப்பின்வைத் தியநா தப்பெயர்
நீங்குமா தலிற்றேன்
மலர்க்குலாம் வேளூர் வயித்திய நாத வள்ளலே
நோயறுத் தருளே.—5.

நோயற்ற வாழ்வே வாழ்வென மேலோர் நுவன்றன
ராதலா லெவர்க்கும்
தாயக மாமித் தலத்தையே யடைந்தோர் தங்கள்நோ
யகற்றல்நின் கடனே
நேயத்தாய் தந்தை யாதலால் மேலும் வயித்திய
நாதனும் நீயே
ஆயதால் வேளூர் வயித்திய நாத வண்ணலே நோயறுத்
தருளே.—6.

வல்லவன் றனக்குப் புல்லுமா யுதமென் றறைந்தனர்
மானிலத் தெல்லாம்
வல்லநீ மண்ணை யெடுத்தெலா நோயு வாட்டினை
பணச்செல வில்லை
வல்லதோர் முயற்சி வேண்டிய தில்லை மருந்திதற்
கிணையெங்கு மில்லை
வல்லவா வேளூர் வயித்திய நாத வள்ளலே நோயறுத்
தருளே.—7.

எளியவர்க் கெளியேம் அவர்க்குநா முறவேம் என்றுநீ
யெழுதினை மறையுள்
ஒளியவே யவற்றைச் செய்திட முடியா தொவ்வொரு
மனத்தினு முளதால்
எளியனேற் கெளிதா யுறவதா யருள்வா யெனவுன
தடைக்கலம் புகுந்தேன்
அளியமர் வேளூர் வயித்திய நாத ஐயனே நோயறுத்
தருளே.—8.

சிலவுள செய்கைத் தவற்றினால் ஊழின் றிறத்தினாற்
சிலவுள அவற்றூழ்ச்
சிலவில வஃது தீர்வுழி மற்றைச் சிலவில மருந்தினா
லென்று

பலகலை யுணர்ந்த பண்டித ருரைப்பர் நோயெலாந்
தீர்த்தலே நினக்கு
வலமதாம் வேலூர் வயித்திய நாத வள்ளலே நோயறுத்
தருளே.—9.

நோயுறிற் கற்ற நூலறி வறுமுன் துய்ப்பன
வெருக்கும்நுண் ணறிவும்
மேயுறு மனமும் புண்ணுறு முயிரைப் போக்கவுந்
துணிவுறும் இன்சொல்
காயுறு மிரும்பாய்க் காதுறு மெவையுந் தெரிவுறு
முனக்குநன் குணர்ந்தோர்
ஆயுறும் வேலூர் வயித்திய நாத அண்ணலே நோயறுத்
தருளே.—10.

கன்மத்தின் பயனு விதித்ததே விதியாம் கருத்தினில்
மதித்ததே மதியாம்
முன்னத்தை மதியால் வெல்லலா மென்ன
மொழிந்தனர் மூதறி வோர்கள்
சொன்னத்தை மதித்தே யொழுகுவேற் கெல்லாக்
கன்மத்தின் றொடக்கறுத் தென்றும்
அன்னமார் வேலூர் வயித்திய நாத அண்ணலே
நோயறுத் தருளே.—11.

# III

## திருப்புகலூர்

# மிடியறு பதிகம்.

உ

## காப்பு.

நேரிசை வெண்பா.

நின்பூசை யாற்சனக னீடரசும் ஞானமும்வீட்
டின்பும் பெறச்செய்தா யெற்குமவ்வா—றன்பூட்டி
இம்மை மறுமைவீட் டின்பருள்வாய் வேழமுகச்
செம்மையுட் செல்வவர சே.

---

## திருப்புகலூர் மிடியறுபதிகம்.

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருமகட் ககலாப் புகலிட மாகச் செம்பொருள்
கொள்ளுத லானும்
திருவருட் கிடனாப் பொருந்துத லானும் தீயவெம்
மிடிப்பிணி யுற்றோர்க்
கருமருந் தன்ன புகலிட மாத லானுமித் தலத்தையே
யடியேன்
பெருமைசேர் புகலா வடைந்தனன் புகலூர்ப் பிஞ்ஞகா
மிடியறுத் தருளே.—1

தம்மையே புகழ்ந்தென் றோதிய பதிகந் தன்னிலே
நீயெழுந் தருளும்
செம்மைசே ரிந்தத் தலத்தையே பாடிற் செல்வங்க
ளிம்மையே யடைபூஉ

அம்மையே சிவலோ காளளா மென்ன வரைந்தனர்
சுந்தர ரதனல்
இம்மையே நின்னைப் பாடினன் புகலூர் எந்தையே
மிடியறுத் தருளே.—2

அருளெனு மன்பீன் குழவியும் பொருளா
லாகுமென் றரைந்தன ரெல்லாம்
தெருளுறத் தாமே யுணர்ந்தசெம் மனத்துச்
செந்தமிழ்த் திருக்குற ளுரைத்தோர்
பொருளைநீ யருளின் அன்புகொண் டருளைப்
பொருந்திட லாமென வடைந்தேன்
அருளேயே யுருவாக் கொண்டருள் புகலூ
ரத்தனே மிடியறுத் தருளே.—3

வறிஞர்மெய் மொழியும் பொய்மொழி யாகும்
இன்சொலும் வன்சொலா மவரை
அறிஞரு மறிவி லாதரா எணுவ
ரன்னையர்* முன்னையா அகல்வர்
செறிவுறு மன்பர் வன்பரா குவர்மற்
றென்செய்கேன் பொருளிலே னதனல்
அறிவினுக் கறிவா யமர்ந்தருள் புகலூர்
அன்னையே மிடியறுக் தருளே.—4

*முன்னையா = மூதேவியாக

வடிவைநன் மனத்தைக் குணத்தைநற் குலத்தை
வாட்டியே யோட்டுவன் கொடிய
மிடியெனும் பாவி வெளிப்படி னென்ன
விளம்பினர் மெய்யருட் கவிஞர்
வடியருட் கடலா யுயிரினுக் குயிராய்
வாழும் நீ பாராமுக மாமோ
பொடிதிகழ் மேனிப் புண்ணியா புகலூர்ப்
புனிதனே மிடியறுத் தருளே.—5

*இலனென்னு மெவ்வ முரைதரா தீவோ
னேமுதற் குலத்தவ னென்றார்
குலனில னீயென் றுரைத்தியே லென்றுங் கொடாக்
கண்ட ரறமற மிரண்டும்
நலனிலாப் பிறவி வித்தென லொக்கு
நானெனுஞ் செருக்கறுத் தீவோன்
குலனுளான் சிறிதும் விருப்பிலன் புகலூர்க்
குன்றமே மிடியறுத் தருளே.—6

---

*இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள, என்னும் அருமைத் திருக்குறள் ஈண்டு உய்த்துணரற் பாற்று.

மாயையாம் பொருளை யுதவிலாங் குழன்று
வருந்துவை யெனில்மனை மக்கள்
மாயையாஞ் சுமையைத் தலைமிசை வைத்தாய்
சுமக்கநற் பொருள்வலி யிலனற்
றுயையே யொப்பா யச்சுமை யகலுந்
தனையுமவ் வலிமையைப் பெற்று
நேயவீ டடைய எலாம்வல புகலூர்
நித்தனே மிடியறுத் தருளே.—7

விதியிட முறையிட் டிடவது விதித்தோ
னிடமுறை யிடுகென வவனும்
திதியையே புரிவோ னிடஞ்சொலென் றிடவத்
திருமகள் கொழுநனு மானே
விதியினை மாற்ற வல்லுநன் மிருகண்
டேயனை நினைகென நீயே
கதியென வந்தேன் பதியெனப் புகலூர்க்
கடவுளே மிடியறுத் தருளே.—8

யாவுநின் னுடைமை யென்னலால் என்று மேழைபங்
காளனென் றிடலால்
தேவுள்நீ முதலோ னென்னலால் வேட்குஞ் செல்வமே
நல்குவோ னெனலால்

பாவுக்குந் தந்தை தாயென லாற்கை யிருப்பதும்
பொன்மலை யெனலால்
நாவுக்கிங் கிசைந்த பாடினன் புகலூர் நண்பனே
மிடியறுத் தருளே.—9

மெய்யுணர் வில்லாச் செல்வர்பாற் செல்ல மேனியுஞ்
சாணள வாக
ஐவகை யறிவு மழியக்கால் தளர ஆருயிர்
பாரமாய் மனமும்
நைவகை நாண வறுமைமுன் றள்ள மானம்பின்
றள்ளயா னயர்ந்தேன்
செய்வகை யறியேன் அடைக்கலம் புகலூர்ச் செல்வமே
மிடியறுத் தருளே.—10

தெய்வநீ றணியிற் செல்வமும் பெருகும் தீவினை
யகலும்நோய் போகும்
நைவகை பூத பிசாசுபில் லியுபோம் ஞானத்தை
மேவுறும் மனமும்
உய்வகை யடையக் கிறிஸ்துவ மிஸ்லா முலகின்பல்
மதங்களுந் தழுவும்
சைவநீ றணிந்தே னுகலாற் புகலூர்த் தாணுவே
மிடியறுத் தருளே.—11

# IV

# திருமறைக்காடு

# அறிவுறு பதிகம்

# காப்பு.

*ஆனைமுகத் தாற்பாச வங்குசத்தா லன்பர்மன
வானைவச மாக்கிமுன் ஞானவழுன்—ஞானபல
வாசனையை வாட்டிப்பின் வந்தணுகா மற்பிணிக்கும்
ஈசனருண் முன்னவனை யேத்து.

*ஆனை முகத்தால், பாசத்தால், அங்குசத்தால் எனப்பிரிக்க.

(உள்ளுறை) மானைக்காட்டி மானைப்பிடிப்பது போல அருட்கடலாகிய பெரிய பிள்ளையார் தமதன்பர்களை உய்வித்தற்பொருட்டு அன்னோர் மனமாகிய யானையைப் பிடித்துத் தம்வசப்படுத்து, அம்மனமாகிய யானைக்கியல் பா னமைந்துள்ள மும் மதமாகிய மும் மலத்தைக்கெடுத்துத் தனது திருக்கரத்திலெடுத்துள்ள அங்குசத்தாலடக்கி அஃது மீண்டும் மீண்டும் ஐம்புலக்காட்டின் வழிச் சென்றலைந்து திரியா வண்ணம் தமது மற்றோர் திருக்கரத்திலெடுத்துள்ள பாசத்தாற் கட்டித் தமது ஒப்புயர் வற்ற அருட்டிறத்தைக்காட்டி யருளா நின்ற யானை முகத்தோடுகூடிய அருட்டிருவுரு வெடுத்துள்ளாராதலின் அவரருட்டிருவடியை அன்புடன் சிந்தித்துத் துதித்து வணங்குவோமாக.

# திருமறைக்காடு அறிவுறுப்திகம்.

திருமறைக் காடுந் திருமறைக் காடர் எனும்பெயர்த்
தேவுந்தீ வினைதீர்
திருமறைத் தீர்த்தம் திருமறைக்காப்புச் செய்யவின்
னிசையருட் டெய்வத்
திருமறைக் கதவந் திறக்குநற் றலமுஞ் சேர்தலா
லிங்குவந் தடைந்தேன்
திருமறைச் சிலம்பார் திருமறைக் காட்டின் செல்வமே
அறிவுறுத் தருளே.—1

(உ-ரை) செழுமரங்கள் நிறைந்துள்ள காடும், அக்காட்டின்கண் அமர்ந்துள்ள நாட்ட மூன்றுடைய தேவும், தன்னையணுகி மூழ்குவோர் எல்லாத் தீவினை களையும் நீக்கவல்ல தீர்த்தமும், தந்நலமொன்றையே கருதி வடமொழிவேதங்களால் திருக்காப்பிடப், பொது நலத்தையே கருதியுள்ள, சிவத்தோ டொற்றுமையுள்ள, ஈண்டு ஈரின்புமளிக்கவல்ல, தெய்வப்பண்ணமைந்துள்ள, திருவருளை யெளிதிற் கூட்டவல்ல, தெய்வத்தமிழ்த் திருமறையாகிய தேவாரங்களால் திறக்கவும் மூடவும் பெற்றுள்ள திருக்கதவமமைந்த திருத்தலமும் திருநான் மறையி னியற் பெயரொருங்கமையப் பெற்றிருத்தலின் யான் திருவருண் ஞானத்தைப்பெறுவான் ஈண்டண் ணினேன். திருமறைகளையே திருச்சிலம்பாக வணிந் துள்ள சிவபெருமானே அஃதனையெற்களிக்குமாறு வேண்டுகின்றனன். திருவருள் புரிவதாக.

அருட்பெருந்தலத்திற் பொருட்பயன் கருதி
யமர்ந்துசின் னூட்பணி புரிந்த
அருட்டிறத் தாலே யருட்பெருஞ் செல்வத்
தொண்டர்வெண் பாவந்தா தியுஞ் சீர்
அருட்டிரு விளையாட் டிலகுமந் தாதிஐங்குறு
வேண்டுகோ ளிசைத் தேன்
அருட்டிரு வடையத் திருமறைக் காட்டி னண்ணலே
அறிவுறுத் தருளே.—2

(உ-ரை) திருவருளை யெளிதிற்ற ரவல்ல பெருமை வாய்ந்த இத்திருமறைக்காடு என்னுந்தலத்தின்கண் உலகின்படை தற்கின்றியமையாய்ப் பொருட்செல்வ மொன்றையே கருதிச் சிலகாலம் (டிரஷார்) வேலையை நின்னருட்டிறத்தால் என்னலஞ் சிறிதுங்கருதாது நின்னலமொன்றையே பெரிதுங் கருதிச் செவ்வனே பார்த்துவந்ததின் பயனால் திருவருட் பெருஞ்செல்வர் களாகிய திருத்தொண்டர் திருவந்தாதி திருவிளையாடற்றிருவந்தாதி ஐங்குறு வேண்டுகோள் முதலாய அரியபெரிய நூல்களை எளிதில் இயற்றுந்திறம் எய்தப்பெற்றேன். ஆதலின் என்று மழியாச் செல்வ மாகிய வீட்டின்பையு மெய்த மெய்யுணர்வை யருளுமாறு பன்முறை வேண்டிக் குறையிரந்து நின்றனன்.

அறிவிலா மகவை யடித்துப்பால் புகட்ட லாமென
அறிவுறுத் துவர்நல்
அறிவிலா யானே யறிவுறுத் தென்ன அன்னதை
யருள்கிலா என்னே
அறிவிலாய் கொல்லோ அருளிலா யோநல் லாற்றலு
மில்லையோ உனக்(கு) இங்கு
அறிவினுக் கறிவாம் திருமறைக் காட்டி னத்தனே
அறிவுறுத் தருளே.—3

தந்தைதாய் தக்கார் தகவில ரென்ப தவாவ
ரெச்சமே சான்றும்
தந்தைதாய் தெய்வங் குருவுமா தலினல் அறிவுறுத்
தருளல் நின்கடனே.
சிந்தையு ளிருந்தே யாட்டுவோ னீயே சேர்ந்திடும்
பழிபவ முனக்கே
முந்தைமா மறைசொல் திருமறைக் காட்டின்
முதல்வனே அறிவுறுத் தருளே.—4

முத்தமிழ் முதற்சங் கத்திருந் தாய்ந்த முனிவா
னருகிருந் தினிது
நித்தலும் பாவு நிலையமாய் நிரம்ப வீற்கிய
தேசிகர் மௌன

வித்தகக் குருவும் தாயுமா னவரும் மெய்ப்பாஞ்
சோதிமா முனிவர்
உத்தம ருதித்த திருமறைக் காட்டின் உத்தம
அறிவுறுத் தருளே.—5

ஓரறி வுயிரா மாமுதல் யாவும் உயர்மறை
யென்னில் ஆறறிவின்
ஓரறி யுயிரா மியானுமிங் குற்றுல் உயர்மறைப்
பொருளுணர்ந் தீண்டு
தேரறி வார்ந்த தேசிகர் குழாத்தைச் சேர்ந்துநின்
னருள்கொண்டு மெய்மை
ஆரறி வுறவுற் றனன்திரு மறைக்காட் டப்பனே
அறிவுறுத் தருளே.—6

வேண்டுவார் வேண்டு கின்றன ஈவோன் என்றிட
லானும்மெய்ச் சுடாாய்க்
காண்டகும் உருவும் அருவுருவாகி
ஈருருக்காட்டுத லானும்
தாண்டரும் பிறவிக் கடலுள்நின் றெடுப்போன் எனக்
கரை யமர்தலி னானும்
ஈண்டிவ ணடைந்தேன் திருமறைக் காட்டின் எந்தையே
அறிவுறுத் தருளே.—7

அறிவித்தா லன்றி அறிகிலேன் அறியுந் தன்மையா
லறிவனென் றரைந்தார்
அறிவினை யறிவ தாம்பொரு ளென்றார் அறிவுள்நீ
நிற்றிமா சகற்றி
அறிவினை விளக்கு வாய்செருக் காற்சிற் றறிவின
னீயெனேன் நீமுற்
றறிவினை நீயே திருமறைக் காட்டின் அண்ணலே
அறிவுறுத் தருளே.—8

மாயையா முலக மெனும்கருங் காட்டுள்
வாயிலாச் சிற்றறி வுடைய
சேயையே புகுத்திப் பேதைமைக் கயிற்றாற்
கண்ணையுங் கட்டத்தீ வினையாம்
நோயையே செயுமுட் டைத்திட வலறு
நொய்யனை யொறுத்தலு மழகோ
தாயையே யொப்பாய் திருமறைக் காட்டின்
றந்தையே அறிவுறுத் தருளே.—9

எழுதுவ துன்சீர் படிப்பது மஃதே
இயற்றுவ துன்பணி துயரான்
அழுவதுன் னிடத்தே சொல்வதுன் பெயரே
அணிவதுன் திருவடி மலரே.

தொழுவது முனையே நினைவதுன் கழலே
யாதலா னின்கடன் றொழும்பன்
பழுதினை யகற்றல் திருமறைக் காட்டின்
பண்பனே அறிவுறுத் தருளே.—10

நிலையிலாச் செல்வ மீபவ ளலைமான் நிலைத்தழி
கல்வியைக் கலைமான்
அலைவிலா வறிவை யளிப்பவள் மலைமான் அவளுநின்
னிடத்தவ ளதனால்
மலையிலக் காக வுன்னையே பிடித்தேன் மறுத்திடா
தியாவையு மீவோர்
இலையுனை யொப்பார் திருமறைக் காட்டின் எந்தையே
அறிவுறுத் தருளே.—11.

## காப்பு.

ஆணவத்தின் பேரிருளும் ஆமாயை யின்மயக்கும்
காணவத்தைக் காமக் கதிப்புமறத்—தாணுவைப்போல்
முக்கணொளி யானம்மை முத்திநெறி யுய்க்குமலைக்
கைக்களிற்றைக் கைதொழுதக் கால்.

---

திருச்சிற்றம் பலமென் றொருமுறை யுரைக்கில் தீவினை
யாவும்விட் டகலும்
திருச்சிற்றம் பலமென் றிருமுறை யுரைக்கில் திருவரு
ளுறவறி வுதிக்கும்
திருச்சிற்றம் பலமே மும்முறை யுரைக்கிற் சேரலாம்
சேரும் வீடும்
திருச்சிற்றம் பலமார் திருத்தில்லை மேவுஞ் செல்வமே
வீட்டையெற் கருளே.—1.

அன்புவெற் புதித்த விதழ்மடைக் கண்ணீ ராற்றினா
லின்பவீ டடைந்தார்
அன்புரு வாகும் வாதவூ ரடிகள் அதையொத்து
முத்துத்தாண் டவரும்
அன்புரு வடைந்தே யருளுரு வடைந்தே யுடலொடு
மின்பவீ டடைந்தார்
அன்புரு வானோய் தில்லையின் மேவு மன்னையே
வீட்டையெற் கருளே.—2.

அருட்கவிப் புலமை யுறுப்பினுஞ் சிறந்த தன்புறு
மனமென்று மேலாம்
அருட்கொலா விரதத் தோரினுஞ் சிறந்தோர் அன்புறு
புலையரே யென்றும்
அருட்பிழம் பமர்ந்திங் கின்பவீ டுற்றார் ஆவுரி
கீழ்க்குலத் தவரும்
அருட்பிழம் பாகுந் திருத்தில்லை மேவும் அப்பனே
வீட்டையெற் கருளே.—3.

சிவகணத் தவரே தில்லையில் வாழுந் தணரென்றும்
தில்லையை யுற்றோர்
சிவகதி யுறுதல் திண்ணமே யென்றும் திருமறை
முரசறை தலினால்
சிவகதி யடைவான் தில்லையின் மேவுந் தெய்வகற்
பகமுனை யடைந்தேன்
சிவகதிக் கிறைவா தில்லையின் மேவுஞ் செம்மலே
வீட்டையெற் கருளே.—4.

நாடகத் தோர்கள் நாடகத் தோடு நாடகங்
கண்டகங் களிப்பார்
நாடகத் தேவர் நாடகத் தேவே நாடக
மன்றும்நா டகம்பன்

நாடகத் தோர்ந்த நாடகங் கண்டு நாடகத்
தழிவிலின் பெய்த
நாடகத் துற்றேன் திருத்தில்லை மேவும் நம்பனே
வீட்டையெற் கருளே.—5.

ஐந்துபூ தங்க ளொன்றிலொன் றொடுங்க
அவைமுதற் றேவரவ் வாறே
அந்தமாம் வெளியும் பரவெளி யொடுங்கும்
ஆதலாற் சதாசிவன் சிவத்துள்
அந்தமாம் வெளியாக் காட்டிவீ டளித்தற்
கியாவர்க்கும் இறைவ னாதலினுல்
வந்துனை யடைந்தேன் திருத்தில்லை மேவும்
வள்ளலே வீட்டையெற் கருளே.—6.

புறத்துள பொய்மைப் பொருண்மயக் கறப்புன்
மனத்தையுள் ளடக்கியோ கத்தால்
திறத்துளே மெய்மைப் பொருளைக்கண் டஃதே
புறத்துள திறத்தைஞா னத்தால்
அறத்தெளிந் துய்ந்தா ருண்மைஞா னியரியான்
அவரடிப் பற்றியிங் குற்றேன்
புறத்தகத் திலகும் திருத்தில்லை மேவும்
புண்ணியா வீட்டையெற் கருளே.—7.

ஐந்தொழிற் பாவை யாட்டுவோர் தம்மை யாட்டுவே
னியானென மன்றுள்
ஐந்தொழி லாட்டு மொருவனு வாடு முதல்வனென்
றடைந்தன னின்பால்
ஐந்தொழி லாளர்க் கென்னையா ளாக்கா தருட்டிருப்
பதத்துக்கா ளாக்கி
ஐந்தொழிற் றலைவ திருத்தில்லை மேவும் அத்தனே
வீட்டையெற் கருளே —8.

உடலுறுப் பெவையும் முயிர்நிலை பெறற்கிங்
குதிரத்தை யுதவுத லானும்
உடன்முழு திறைவ னிறைந்திருந் தானு
முவப்பினிங் குறைதலி னானும்
உடலுளே யிதய மேசிறந் தாங்கிவ்
வுலகிலித் தலமதே சிறப்பென்
றுடனிவ ணடைந்தேன் திருத்தில்லை மேவு
மொருவனே வீட்டையெற் கருளே.—9.

வாழையின் கனியைக் கொணர்ந்தவர் புறத்தில்
வாயினைக் கொணர்ந்தவர் வீட்டுள்
ஏழைமை மதியா லம்மொழிப் படியே
யின்மனக் கனியிலா திங்ருக்

கோழையார் வாயில் வந்ததைக் குளறி
வந்தனன் வீட்டுளே யிருத்தற்
கேழைபங் காளா திருத்தில்லைமேவும்
எந்தையே வீட்டையெற் கருளே.—10.

மெய்யுணர் வுரைத்த மெய்யுணர் புலவன் மெய்மைசேர்
மெய்ம்மறைக் கண்ணே
மெய்யுரை யாதி பகவன்வா லறிவன் அந்தணன்
வேண்டுத லில்லான்
ஐந்தவித் தானெண் குணத்தனென் றுனையே ஐயற
வுரைத்தனன் அதனால்
மெய்யுணர்ந் தடைந்தேன் திருத்தில்லை மேவும் வித்தகா
வீட்டையெற் கருளே.—11.